

# பறவை வேட்டை

அமெரிக்கப் பைன் மரக்காட்டில் சோர்வு தரக்கூடியது. அங்கு வேறு ரகமரங்களைக் காண முடியாததுதான். தரையில் முளைத்திருக்கும் புல் கூடப் பார்க்கக் கிடைக்காமல் ஊசி போன்ற பைன் இலைகள் உதிர்ந்து மைல் கணக்கில் தடித்த மெத்தையாகப் பரந்து கிடக்கும். பச்சைப் பசேலென்ற அந்த இலைகள் உதிர்ந்த பின்னும் இலேசில் சருகாகாது. உலரத் தொடங்கிச் சிறிது நிறம் மாறுவதற்குள் உறைபனி பெய்ய ஆரம்பித்து விடும். பனிப்போர்வை எல்லாவற்றையும் சில மாதங்களுக்கு ஒத்திப் போட்டு விடும்.

எர்னஸ்ட் பைன் காட்டில் புகுந்து பள்ளத்தில் இறங்கிச் சென்றான். வரப்போகும் குளிர்காலத்தின் அறிகுறியாகப் பறவைகள் இடம் மாறிச் சென்று விட்டிருந்தன. முயல் குட்டி அளவுக்குப் பருத்துத் திரண்டிருந்த அணில்கள் மட்டும் அங்கொன்றும் இங்கொன்றுமாகப் பாய்ந்து சென்று கொண்டிருந்தன. ஒரு அணில் மிகுந்த தைரியத்துடன் தன் முன்னங்கால்களை உயர்த்தி அவனை உற்றுப் பார்த்தது.

பள்ளத்தின் கீழே ஆறு ஓடிக்கொண்டிருந்தது. ஆறு என்பதை விட ஓடை என்று கூறுவதே பொருத்தம். பைன் காடும் பள்ளத்தில் இறங்கி ஓடைக்கு மறுபுறத்தில் மேடிட்டுக் கண்ணுக்கு எட்டிய தூரம் விரிந்து கிடந்தது.

எர்னஸ்டுக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து மீன் பிடிக்கும் சாக்கில் அந்த ஓடைக்குத்தான் அப்பா அவனை அழைத்து வருவார். மீன் பிடிக்கப் போவதை எல்லாரும் ஓய்வு அல்லது உல்லாசத்துடன்தான் இணைத்து நினைப்பார்கள். ஆனால் அது அப்பாவுக்கு வீட்டிலிருந்து விலகி, அலைபாயும் மனதை ஆறுதல் படுத்தும் சாதனம் என்பதை எர்னஸ்ட் அறிந்திருந்தான். வீட்டில் யாருடனும் ஐந்தாறு சொற்களுக்குமேல் பேசாத அவர் மீன் பிடிக்கப் போகும்போது மட்டும் எர்னஸ்டிடம் இடைவெளிவிடாமல் பேசுவார். அவன் கேட்கும் கேள்விகளுக்கு மட்டுமல்லாமல்

அவராகவே பல விஷயங்களைப் பற்றிப் பேசியிருக்கிறார். வானம், மேகம், தாவர வகைகள், உயிரினங்கள், கடவுள், மனிதன், சிவப்பு இந்தியர்களின் பழக்க வழக்கங்கள், வெள்ளையர் சமூகத்தின் குடும்ப அமைப்பு, வெள்ளையர்கள் முதன் முதலில் அந்த நாட்டில் காலெடுத்து வைத்ததும் தொடங்கிய அடக்குமுறை இன்னும் ஓயாது தொடர்ந்துகொண்டிருப்பது... மீன் பிடிக்கும் தூண்டிலுடன் அவ்வப்போது இரட்டைக்குழல் துப்பாக்கியையும் எடுத்து வந்து அவர் பறவை வேட்டையாடுவது உண்டு. அவர் கண் பார்வையில் கோளாறு இருக்க வேண்டும். நான்கு முறை சுட்டால் ஒருமுறை தான் வைத்த குறியில் குண்டுபடும். அடிபட்ட பறவையைக் கொண்டு உயிரினங்களின் உடற்கூறைப் பற்றி அவர் விளக்குவார். உடற்கூறுதான் அவர் ஜீவனம். ஆனால் வைத்தியத் தொழிலில் அவருக்குக் கிடைத்த வெற்றி, பறவை வேட்டையில் அவர் அடைந்த வெற்றிக்கு இணையானது. அம்மாவின் வாயிலிருந்து அவர் சிறிது நேரமாவது தப்பிச் செல்ல முயற்சி செய்ததற்கு அதுவும் காரணமாயிருக்கக் கூடும்.

எர்னஸ்ட் ஓடையை உற்றுப் பார்த்த வண்ணம் நின்றான். டிரௌட் மீன்கள் சாரிசாரியாக ஓடையில் போய் கொண்டிருந்தன. இனி அந்த இடத்தில் அவை யாதொரு விபத்துக்கும் உள்ளாகாது. இரு தினங்கள் முன்புதான் அவனுடைய அப்பா துப்பாக்கியின் வாயைத் தன் பொட்டினருகில் வைத்து விசையைத் தட்டிவிட்டிருந்தார். சவப் பெட்டியில் அவரைக் கிடத்தியபோது தலையின் ஒரு பாகத்தை விசேஷ முயற்சி எடுத்துக் கொண்டுதான் பொருத்தி வைத்திருந்தார்கள். எர்னஸ்ட் அந்த நிலையில்தான் அவரைப் பார்க்க நேர்ந்தது.

ஒரு சிறு கல்லை எடுத்து ஓடைப் பரப்பின் மீது எர்னஸ்ட் எறிந்தான். தண்ணீர் சிதறி விழ மீன்கள் ஒரு நொடியில் எங்கோ மறைந்து போயின. இனி அந்த இரட்டைக் குழல் துப்பாக்கி எர்னஸ்டுக்குத்தான். ஆனால் அவன் அந்தப் பைன் காட்டிற்கு எடுத்து வந்து அதைப் பயன்படுத்த முடியாது. அவனுடைய வாழ்க்கை அவன் இளம்பிராயக் காலத்திலிருந்தும் பெற்றோர் வீட்டிலிருந்தும் வெகுதூரம் விலகிப் போயிருந்தது. அவனுடைய அப்பாவால் முடியாதது அவனுக்குச் சாத்தியமாயிருந்தது. ஒழுங்காகப் பள்ளிப் படிப்பு முடிவதற்குள் வீட்டை விட்டு வெளியேறி யுத்தத்தில் சேர்ந்து கடல் கடந்து எங்கோ வெளி நாட்டில் குண்டடிபட்டு ஆஸ்பத்திரியில் கிடந்து, ஒரு பிழைப்பைத் தேடி இன்னொரு நாட்டில் வசிக்கப் புகுந்து, எழுதத் தொடங்கி, மணம் புரிந்து கொண்டு, ஒரு குழந்தை பிறந்ததும் மனைவியிடமி

ருந்து விவாகரத்து பெற்று இன்னொருத்தியை மணந்து கொண்டு, புகழ் பெற்றவனாகி மகத்தான எதிர்காலம் உண்டென்று நிபுணர்கள் அவனுக்குச் சான்றிதழ் கொடுக்கத் தொடங்கிய காலத்தில் சற்றும் எதிர்பாராமல் அவனுடைய அப்பாவிடமிருந்து கடிதம் வந்தது. எவ்வளவோ ஆண்டுகளுக்குப் பின் அப்படியொரு விரிவான கடிதம் அவர் அவனுக்கு எழுதியிருந்தார். அவர்கள் வீட்டுச் சுற்றுப்புறம் பற்றி, அவர் ஒருநாள் நிறைய மீன் பிடித்தது பற்றி, அவனுடைய அம்மாவுக்கு அவன் எழுதிய புத்தகம் பிடிக்காமல் போனது பற்றி, அவருக்கே அப்படியொரு அபிப்பிராயம் ஏற்பட்டதைப் பற்றி, அவர்கள் ஊரில் நேர்ந்திருக்கும் சில மாற்றங்கள் பற்றி... வெகு சுவாரஸ்யமாக இருந்தது கடிதம். அதே நேரத்தில் அப்பாவைப் பற்றி ஒன்றுமே அவனுக்குத் தெரிவிக்கவில்லை. ஒரு சிறு பின்குறிப்பாக அப்பா கேட்டிருந்தார்: "உன்னால் சிறிது பணம் அனுப்ப முடியுமா?"

கடிதமே .எர்னஸ்டுக்குப் பல மாதங்கள் கழித்துத்தான் கிடைத்தது. ஒருமுறை அதை அவசரமாகப் படித்து ஒரு மூலை யில் போட்டுவிட்டு அதை இன்னொரு முறை படித்தபோது இன்னும் சில மாதங்கள் சென்றிருந்தன. அப்போதுதான் அக் கடிதமே அந்தப் பின் குறிப்புக்காகத் தான் எழுதப்பட்டதோ என்று அவனுக்குத் தோன்றிற்று. எப்படி அதை முதன் முறையே கவனிக்கத் தவறியிருந்தான்?

அவனுக்கும் அவனுடைய அப்பா அம்மாவுக்குமிடையே பண விவகாரங்கள் நின்று போய்ப் பல வருடங்கள் ஆகிவிட்டன. யுத்தத்திலிருந்து திரும்பி வந்து சில நாட்கள் அவர்களோடு தங்கியிருந்தான். அந்தச் சில நாட்களுக்குள் அவன் வேலை ஒன்றும் தேடப் போகவில்லையே என்று அவன் அம்மா கவலைப் பட ஆரம்பித்துவிட்டாள். அதற்காக அவன் மீண்டும் வீட்டை விட்டுச் சீக்கிரமாகவே வெளியேறிவிட்டான். அதன் பிறகு எப்போதோ ஓரிரு கடிதங்கள். அவனுடைய முதல் நாவல் வெளிவந்தபோது வீட்டை விட்டு இறுதியாக வெளியேறி ஏழெட்டு ஆண்டுகள் ஆகியிருக்கும். அவனுக்கு அவனுடைய அப்பா, அம்மாவைப் போய்ப் பார்க்க வேண்டுமென்று தோன்ற வில்லை. ஆனால் அவர்கள் மீது அவனுக்கு மனவருத்தம் அதிகம் மிஞ்சவில்லை. தபாலில் நாவல் பிரதியை அனுப்பிய போது 'அப்பாவுக்கு' என்றுதான் குறிப்பிட எண்ணியிருந்தான். ஆனால் எழுதியபோது அது 'அம்மாவுக்கு' என்று வந்துவிட்டது. அவள் நாணயமானவள். அது பிடிக்கவில்லை என்று தயக்கமில்லாமல் சொல்லிவிட்டாள். அப்பாவால் அது முடியவில்லை.

அப்பாவால் எது முடிந்தது? எர்னஸ்ட் திரும்பி நடக்க ஆரம்பித்தான். வீடு போய்ச் சேர ஒரு மணி நேரமாவது ஆகும். அன்று அப்பாவின் சொந்தக் காகிதங்கள், தஸ்தாவேஜுகளைப் பிரித்துப் பார்க்க ஏற்பாடு செய்திருந்தது. அப்பாவின் சாவுக்கு வந்திருந்த இரு பிள்ளைகளையும் நேரில் வைத்துத்தான் இது நடக்க வேண்டும் என்பதில் அம்மா கண்டிப்பாக இருந்தாள்.

பணமுடை யாருக்கு? அம்மா அவனைக் கேட்டிருக்க மாட்டாள். அவளுக்கு மட்டும் எங்கே பணம் ஏராளமாக இருந்துவிடப் போகிறது? இருப்பதை வைத்து நிர்வாகம் செய்ய வேண்டும் என்பதுதான் அவளுடைய குறிக்கோள். அப்பாவை அவள் தூண்டிக் கொண்டே இருந்தாலும் சுய கௌரவத்தைக் கைவிடமாட்டாள். அவளுக்குத் தெரியாதபடி அப்பாவுக்கு ஏதோ நெருக்கடி நேர்ந்துவிட்டது. ஆனால் அவர் தன் தலை யைப் பிளந்துகொண்டது அதற்காகவா?

அப்பாவின் கடிதத்தை அவன் இரண்டாவது முறை படித்த போது அவனே பணமுடையில் இருந்தான். பத்திரிகைகளில் அவனுடைய புகைப்படத்தை வெளியிட்டார்கள். அவனுடைய அபிப்ராயங்களை வெளியிட்டார்கள். அவன் வெளியூர் சென்ற போது இரயில் தவறியது பற்றிச் செய்தி வெளியிட்டார்கள். ஆனால் நான்கு மாத வாடகைக் கொடுக்க முடியாமல் அவன் திண்டாடுவதைப் பற்றி யாரும் கவலைப் பட்டுக்கொள்ளவில்லை. வருடக் கணக்காக அவனால் ஒரு புது உடை வாங்கிக் கொள்ள முடியாதது பற்றி யாரும் கண்டு கொள்ளவில்லை. அப்பாவுக்கும் அதெல்லாம் தெரியாது. எல்லாரையும்போல அவரும் பத்திரிகை களில் அவனைப் பற்றிச் செய்திகள் வரு வதையும் பெரிதாகப் புகைப்படத்தை வெளியிட்டிருப்பதையும் பார்த்திருப்பார்.

அப்பாவுக்குக் கற்பனை குறைவு. ஆனால் அப்பாவை மட்டும் குறை சொல்லிப் பயனில்லை. உண்மையைக் கற்பனை செய்து தெரிந்துகொள்ள யாராலும் முடிவதில்லை. அல்லது தெரிந்து கொள்ள விரும்புவதில்லை. அவனுக்குக்கூட அவனுடைய அப்பா அம்மா பற்றி எல்லா உண்மைகளையும் தெரிந்துகொள்ள முடியவில்லை. இனிமேல் தெரிந்துதான் என்ன பயன்?

பைன் காட்டை விட்டு வெளியேறியவுடன் அவனுடைய வீடு கண்ணுக்குத் தெரிந்தது. எர்னஸ்ட் ஒருமுறை திரும்பிப் பார்த்தான். அவன் அப்பாவிடமிருந்து எவ்வளவோ விஷயங்களைக் கற்றுக் கொண்ட பைன் காடு யாதொரு சலனமும் இல்லாமல் அமைதியாக இருந்தது.

அவர்கள் சீக்கிரமாகவே இரவு உணவை முடித்துக் கொண்டு விட்டார்கள். அப்பாவுக்கு நண்பரான ஒரு வக்கீலும் உடன் இருந்தார். சொத்து முதலியன எளிமையாகச் சிக்கலற்றதாக இருந்தன. இவ்வளவு நாட்கள் ஒரு மாதிரிக் கட்டிக் காத்தது போல இனியும் அம்மாதான் பார்த்துக் கொள்வாள்.

புழையக் கடிதங்கள், புகைப்படங்கள், அழைப்பிதழ்கள், வாழ்த்துக் கடிதங்கள்— அப்பாவின் ஞாபகார்த்தமாக ஆளுக்குக் கொஞ்சமாகப் பிரித்துக் கொண்டார்கள். கடைசியாக வந்த சில கடிதங்கள் அப்பாவின் மேஜையறைக்குள் இருந்தன. அம்மா தான் அதைக் கண்டுபிடித்து வெளியே எடுத்துப் போட்டாள். தன் கையெழுத்து ஓர் உறைமீது இருந்ததைப் பார்த்து எர்னஸ்ட் அதைத் தன்னிடம் வைத்துக் கொண்டான். யாரும் அதைப் பெரிதாக எடுத்துக் கொள்ளவில்லை.

இரவு படுக்கப் போகுமுன் எர்னஸ்ட் அந்த உறையை எடுத்துப் பார்த்தான். அவனுடைய கடிதத்தை அவனுடைய அப்பா பிரிக்கக்கூட இல்லை. அது ஒரு வாரம் முன்பே அவருக்குக் கிடைத்திருக்க வேண்டும். என்ன தயக்கமோ, அதைப் பிரிக்காமல் படிக்காமல் வைத்திருந்தார்.

முதலில் அதை அப்படியே கிழித்துப் போடத்தான் எர்னஸ்ட் நினைத்தான். ஆனால் தன்னை நிதானப்படுத்திக் கொண்டு உறையைப் பிரித்து அவன் எழுதிய கடிதத்தை அவனே படிக்கத் தொடங்கினான். சுருக்கமான கடிதம், பதிலெழுதக் காலதாமதமானதற்கு ஒரு விளக்கம் கூட இல்லை. 'நானும் சிறிது நெருக்கடியில்தான் இருக்கிறேன். என்னாலியன்ற பணத்தை அனுப்பியிருக்கிறேன். இதோ செக்...”

அவனாலியன்ற பணத்தை நினைக்க அவனுக்கே கூச்சமாக இருந்தது. அது தெரிந்துதான் அப்பா அதைப் பயன்படுத்திக் கொள்ளவில்லை போலும்.

கடிதத்தைப் பையில் மடித்துப் போட்டுக்கொண்டு செக்கை மட்டும் எர்னஸ்ட் கிழித்துப் போட்டான். இம்முறை அப்பாவின் குறி தவறவில்லை.

1983